# நிறை தீபாவளி

சீர் குணா கோலத்தைப் போட்டுவிட்டு நின்று அதை அழகு பார்த்தாள். உடனே அருகே யிருந்த ஓர் அகலப் பாத்திரத்தில் கையைக் கழுவி விட்டுக் கிழிசல் துணியில் துடைத்துக் கொண்டு செம்மண் கிண்ணத்தைக் கையில் எடுத்தாள். தான் கீழே வரைந் திருந்த சித்திரக் கோலத்தின் மத்தியில் ஆங்காங்கு சிறு செம்மண் கிளிகளைத் தீட்டினாள். மீண்டும் நிமிர்ந்தாள். கோலத் தைக் கண்டு மகிழ்ந்தாள். அவளுடைய தமக்கை சாவித்திரி வாசற்படியருகில் நின்றாள். தன் தங்கை இவ்வாறு கோல மிடுவதையும், மகிழ்வதையும் பார்த்தாள். சிறிது நேரத்துக்கு மேல் அவளால் பொறுமையாக இருக்க முடியவில்லை. அவள் கண்கள் எதிர் வீட்டையும், தெரு வையும் ஒரு முறை பார்த்தன. பார்த்து

விட்டு மீண்டும் அவள் தங்கை யிடம் வந்து நின்றன. அதிருப்தியே நிறைந்திருந்தது. அந்தப் பார்வையில்.

"சுகுணா! உள்ளே போடீ!" என்று சற்று அழுத்த மாகக் கூறினாள் சாவித்திரி.

"ஏன், சாவித்திரி?" என்று நிதானமாகவே கேட்டாள் சுகுணா.

"நல்ல கேள்வி! போ உள்ளே, இரண்டுங் கெட்டானே!" என்று சிறிது தழதழப்புடன் மீண்டும் வற்புறுத்தினாள்.

"இரு, சாவித்திரி! இன்னும் ஒரே ஒரு கிளி. மாலினிக்கு இந்தக் கோலமென்றால் உயிர். அவள் கல்லூரியிலே ஒரு விசேஷத்துக்குக் கூட என்னைப் போடச் சொல்லி அழைத்து போனாள். பெரிய ஹால். நன்றாக இருந்தது. சுவர் வேறே கிடைத்தது. இதுபோல நாலு மடங்கு பெரிசாக்கிப் போட்டிருந்தேன். அதை ஓர் அமெரிக்கப் பெண்மணியும் படம் எடுத்துக் கொண்டு போனாளாம்" என வளவளவென்று பேசினாள் சுகுணா.

சாவித்திரி திண்ணையில் கிடந்த கோலமாவுக் கிண்ணத்தையும், கந்தல் துணியையும் எடுத்துக் கொண்டு உள்ளே கிளம்பினாள். "சரிதான், போதும் உன் கோலப் பைத்தியமும் நீயும்! வா, உள்ளே. நாலு பேர்கள் சிரித்து, மூன்று பேர்கள் காறி உமிழ..."

சுகுணா தன் தமக்கையின் பின்னால் நடந்து உள்ளே சென்றாள். அவள் நடையிலே சோர்வு தட்டிவிட்டது. "நான்கு பேர்கள் காறி உமிழும்படி ஒன்றும் ஈனமான வேலை நான் செய்யவில்லை. விதியினால் நேர்ந்த குற்றத்துக்கு நான் பொறுப்பாளியா? என்னைக் கண்டு இந்த உலகம் இரக்கப்படவும் வேண்டாம்,

இகழ்ந்து பேசவும் பேண்டாம்" என்று கூறிவிட்டு அவள் அப்பால் சென்றாள். கண்வழியே தெரியாத கண்ணீர் அவள் தொண்டையிலே புலப்பட்டது.

"அடி, அசடே! உன்னை நான் சுட்டிக் காட்டினேனா? நாம் வேண்டாமென்றால் உலகம் நகைக்காமல் நிற்குமா, செய் என்றால் செய்யுமா; உன் மனசு எவ்வளவு களங்க மில்லாமல் இருந்தாலும் உலகம் ஒப்பாதே. நீ நாளைக்குப் புத்தாடை உடுத்து, வெற்றிலைபோட்டு, பூ வைத்துக் கணவனுடன் மகிழக் கொடுத்து வைக்காமல் பின்னால் பதுங்கி நிற்பதைக் காண என் மனம் விண்டு போக வில்லை என்று நினைக்கிறாயா?" என்று கேட்டு விட்டு, சாவித்திரி பொங்கி வரும் துக்கத்தை அடக்க மாட்டாமல் தவித்தாள்.

"உஷ், சாவித்திரி! நீ கலங்கக்கூடாது. கலங்கினால் உன்னை நான் மன்னிக்கவே மாட்டேன். நான் தெம்பாக இருக்கிறேன். என் மனசையும் சிதறவிடாதே."

"உனக்குத் தான் என்ன பொறுமையோ!" என்று அங்கலாய்த்துவிட்டு சாவித்திரி பின்புறம் போய்விட்டாள்.

சுகுணாவின் கணவன் ஓர் அலுவலகத்தில் காஷியராக இருந்தான். ஒரு நாள் நான்காயிரம் ரூபாய் களவாடியதாக அவனைப் பிடித்து சிறையில் அடைத்து விட்டார்கள். ஜாமீன் கொடுத்து அவனை மீட்டிக் கொண்டு வந்து, வக்கீல்களை வைத்து அவனை நிரபராதி என்று ருஜுப்படுத்தத் தயாராக இருந்தனர், அவனுடைய மனிதர்கள். ஆனால் சுகுணாவின் கணவன் மூர்த்தி எதற்கும் இடங்கொடாமல் கோர்ட்டில் தான் குற்றவாளி என்று ஒப்புக்கொண்டு, தண்டனை ஏற்கத் தயாராக இருப்பதாகக் கூறிவிட்டான். அதன் காரணமாக இரண்டு வருடச் சிறைவாசத்தை மேற்கொண்டு அடைந்து

கிடந்தான். அது நடந்து நான்கு மாதங்களாகி விட்டன. சுகுணாவின் வீட்டினருக்கும், மூர்த்தியின் வீட்டினருக்கும் மூர்த்திமீது மிகந்த கோபம். தன்னோடு நில்லாமல் தன்னைச் சேர்ந்தவர்களையும் புழுதியில் புரட்டி, சகதியில் அழுத்தி விட்டான் என்று அவர்கள் அவமானப்பட்டுக் கொண்டிருந்தனர்.

சுகுணா என்ன நினைத்தாளோ, யாருக்குமே தெரிய வில்லை. என்றைக்குக் கணவன் சிறைக்குள் சென்றானோ, அன்று மறுநாளே அவள் தான் முன்பு படித்த பள்ளியில் ஒரு வேலை தேடிக்கொண்டு விட்டாள். மறுநாள் முதல் நிம்மதியாக வேலைக்குப் போய் வந்தாள். தன் குடித்தனத்தைக் காலி செய்து விட்டுப் பிறந்தகத்தோடு வந்து விட்டாள். தன் குழந்தை முரளியோடு கொஞ்சிக் குலாவினாள். வீட்டிலுள்ளவர்களுடன் சகஜமாகப் பேசிச் சிரித்தாள்.

இன்று சுகுணாவின் அண்ணன் மகள் மாலினிக்குத் தலை தீபாவளி. சம்பந்திகள், மாப்பிள்ளை யாவரும் கல்கத்தாவில் இருந்தனர். இவர்கள் வீட்டில் மூர்த்தியின் கதை நடந்த பிறகு இதுவே முதல் தடவை வருகிறார்கள். இதனால் சுகுணாவின் பெற்றோர், உடன் பிறந்தோர் யாவரும் ஓரளவு மனச்சோர்வுடனே அவர்களை எதிர் பார்த்தார்கள். மாலினின் தலை தீபாவளியை நன்றாகக் கொண்டாட வேண்டும் என்று இருந்தாலும், எல்லோ ருக்கும் சுகுணாவின் பிரச்னை முள்போல் தைத்தபடி இருந்தது. சுகுணாவோ சிறிதும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவள் ஓடி ஓடி வேலை செய்தாள். மாவிலைத் தோரணங்கள் கட்டினாள். மாப்பிள்ளை, சம்பந்திகளுக்கு வசதிகளை ஏற்பாடு செய்தாள்; கோலம் போட்டாள். ரசித்து ரசித்து ஒவ்வொன்றையும் செய்தாள். அவளுடைய இந்தப் போக்கும் மற்றவர்களுக்குச் சிறிது

கஷ்டமாக இருந்தது. மருமகன் சிறைவாசம் செய்யப் போனதிலிருந்து சுகுணாவின் தாயார் தலையில் பூ வைப்பதில்லை, நல்ல புடவை உடுப்பதில்லை. சுகுணாவின் தகப்பனார் வெளியே தலைகாட்டுவதில்லை. அதை உத்தேசித்துத்தான் சாவித்திரி, தன் தங்கை சுகுணாவை எச்சரித்து உள்ளே போகும்படி கூறினாள்.

சாவித்திரி தன்னைச் சமாளித்துக் கொண்டு வெளியே வந்தாள். சுகுணா அப்பொழுதுதான் மாடி அறையில் பூப்போட்ட துணிகளை விரித்துக் கொண்டிருந்தாள். மாலினி ஜன்னல்மீது அமர்ந்தபடி, தன் அத்தை சுகுணாவிடம் பேச்சு கொடுத்துக் கொண்டிருந்தாள். குந்தை முரளி கீழே விரித்துப்போட்ட பழைய விரிப்புகளில் புரண்டு புரண்டு விளையாடிக் கொண்டிருந்தான்.

சாவித்திரி சுகுணாவின் எதிரில் போய் அமர்ந்தாள். மாலினி அவளைப் பார்த்து விட்டு, "ஏன் அத்தை, உன் கண்கள் சிவந்திருக்கின்றன?" என்று கேட்டாள்.

"எனக்கு ஒரு ரத்தினமான தங்கை வாய்த்திருக் கிறாளே! அவள் மட்டும் கொஞ்சம் இங்கிதம் தெரிந்து நடந்து கொண்டால்..." என்று தன் வாக்கியத்தை முடிக்கா மலேயே பெருமூச்சு விட்டாள் சாவித்திரி.

மாலினி சீறிக்கொண்டு சிறுத்தை போல் கிளம்பி னாள். "என்ன, அத்தை! சுகுணாவுக்கு என்ன இப்பொழுது? அவள் என்ன தவறாக நடந்து விட்டாள்? என் மேலே பிரியமாக இருப்பது உங்களுக்கும் பிடிக்க வில்லையா?" என்று படபடவென்று பொரிந்து கொட்டினாள்.

"போடி, பைத்தியங்களா! நான் மட்டும் உங்களிடம் பிரியமாக இல்லையல? ஏதோ தீராது-வேலைக்குப் போகிறாள். மற்றச் சமயத்திலே வெளியே தலை

காட்டாமல், கூடுமானவரை நல்ல துணிமணி, பூ அலங்காரம் ஒன்றுமில்லாமல் இருந்தால்தான் உலகம் ஒப்பும். இல்லாவிட்டால் 'கணவன் ஜெயிலிலே கிடக்கிறான். மான, அவமானமில்லாமல் குலுக்கி, மினுக்கி, ஹாய்யாக இருக்கிறாளே' என்று நினைக்க மாட்டார்களா?" என்று சாவித்திரி தன் அபிப்பிராயத்தைச் சொன்னாள்.

சுகுணா குனிந்த தலை நிமிரவில்லை. தலையணை உறை ஒன்றைப் பிரிப்பதில் அவள் அதிக கவனம் செலுத்தினாள். 'சரி, நாம் சொன்னதை அவள் புரிந்து கொண்டு விட்டாள். இனி இங்கிதமாக நடந்து கொள்வாள்' என்று நினைத்து, மகிழ்ந்து சாவித்திரி போய் விட்டாள்.

மாலினி சுகுணாவை அணைத்துக் கொண்டு, அவள் முகத்தைத் தன் பக்கம் திருப்பி, "சுகுணா! நீ அவர்கள் பேச்சை யெல்லாம் கேட்டு அவல வேஷம் போட்டுக் கொண்டு. பதுங்கிப் பதுங்கி நிற்கக் கூடாது. என் புக்ககத்தினர் அதையெல்லாம் எதிர்பார்க்க மாட்டார்கள். என் கணவர் உன்னைக் கண்டு பேசி அறிமுகம் ஆக வேண்டும் என்று கடிதத்துக்குக் கடிதம் எழுதுகிறார். அதனால்தான் உன்னையே கோலம்போடச் சொன்னேன். அன்றைக்குக் கல்லூரியிலே போட்ட படிக்கோலம் வாசலில் போடச் சொன்னேன்" என்றாள்.

சுகுணா அவளுக்கு ஒன்றும் பதில் சொல்லாமல், "போடி, கழுதை! வரவர மரியாதையே இல்லை. 'அத்தை' என்று வாய் நிறையக் கூப்பிடக் கூடாது? சுகுணாவாமே, சுகுணா!" என்று செல்லமாகக் கடிந்து கொண்டாள்.

"நீ மட்டும் உன் அக்காவைப் பெயர் வைத்து அழைக்கலாமோ!" என்று மாலினி கேட்க, இருவரும் பலமாகச் சிரித்துவிட்டனர்.

சுகுணா முரளியை அப்புறப்படுத்தி விட்டு, கீழே கிடந்த துணிகளை எடுத்துக் கொண்டு போய் விட்டாள். மாலினி முரளியைத் தூக்கி, அணைத்து, முத்தமிட்டுக் குலாவிக்கொண்டு, அந்த அறையிலேயே அன்று மாலை வர இருந்த தன் கணவனைப் பற்றி இன்பக்கனவுகள் காண ஆரம்பித்தாள். அந்தக் கற்பனையிலே மணி போனதே தெரியவில்லை.

"மாலினி! மாலினி!" என்று கீழே இருந்து சத்தம் கேட்டுத்தான் அவள் விழித்துக்கொண்டு இறங்கிச் சென்றாள். முரளி அப்பொழுது கூடத்திலிருந்து கொண்டு ஓர் அதிரசத்தை மென்று கொண்டிருந்தான்.

"மாலினி! முகத்தைக் கழுவி, அழகாகப் பொட்டிட்டுக் கொண்டு, தலை வாரி, பூ வைத்துத் தயாராக இருக்க மாட்டாயோ? தாத்தா ரயிலுக்குப் போனவர் திரும்பி வர நேரமாகிவிட்டது. ரயில் கூவினதுகூடக் கேட்டது. இன்னும் பத்து நிமிஷத்தில் வந்து விடுவார்கள். போ, போ, சீக்கிரம்" என்று மகளைத் துரிதப்படுத்தினாள் மாலினியின் தாயார்.

மாலினி தன்னை அலங்காரம் செய்து கொள்ள ஓடினாள். சுகுணா அவள் தலையை வாரி அழகாகக் கொண்டை போட்டு விட்டாள். அவள் உடுத்த வேண்டிய புடவையையும், நகைகளையும் கொண்டு கொடுத்து விட்டு, முரளியைச் சுத்தப்படுத்திப் புத்தாடை உடுத்தப் போய் விட்டாள்.

சம்பந்திகளும், மாப்பிள்ளையும் வந்து இறங்கினார்கள். அவர்கள் உள்ளே நுழையும் போதே நின்று வாசலில் இட்டிருந்த கோலங்களைக் கவனித்து விட்டுத் தான் வந்தார்கள். மாவிலையைச் சங்கிலி போல் கோத்துக் கட்டியிருந்த தோரணம் முதற்கொண்டு அவர்கள் பாராட்டைப் பெற்றது.

வீட்டிலுள்ளவர்கள் பரபரப்புடன் உபசரணையில் இறங்கினார்கள். மாலினி கண்டும் காணாமலும் கணவனின் அழகை அநுபவித்து வந்தாள். சுகுணா சுறு சுறுப்பாக வந்த விருந்தினர்களுக்குச் சிசுரூஷைகள் செய்து வந்தாள்.

சுமார் ஏழு மணி இருக்கும் போது, சுகுணா முரளியைத் தூங்கச் செய்வதற்காக ஜமக்காளம் எடுப்பதற்கு மாடிப் பக்கம் போனாள். மாலினி தன் கணவனுடன் வெளித் தாழ்வாரத்தில் தெரு விளக்கின் வெளிச்சத்தில் அமர்ந்து தாழ்ந்த குரலில் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டாள். தான் வந்த சந்தடி தெரியாமல் சுகுணா கீழே இறங்கிச் சென்று விட்டாள். முரளியை உறங்கச் செய்து விட்டு, அவள் தன் தாயிடம் சென்று, “அம்மா! நாளைக்கு எங்கள் பள்ளிக்கூடத்தில் தீபாவளி விருந்து நடக்கிறது. கல்வி மந்திரி வரப் போகிறார். கொஞ்சம் வேலையிருக்கிறது. அம்மா! நான் போய் விட்டு இன்னும் ஒரு மணி நேரத்தில் திரும்பி விடுவேன். நாழிகை யானாலும் என் தோழிகளுடன் வருவேன். என்னைத் தேட யாரையும் அனுப்பாதே” என்று கூறினாள். பிறகு மற்றவர் களிடம் சொல்லிக் கொள்ளாமல் வெளியே போய்விட்டாள் சுகுணா.

மாலினி தன் கணவனிடம் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்து விட்டு இறங்கி வந்தாள். அவள் தன் பாட்டியிடம் சுகுணாவைப் பற்றிக் கேட்டபோது, “யாரிடமும் சொல்லாதே. அவள் வந்துவிடுவாள். போனது தெரிந்தால் தாத்தா, அப்பா யாவரும் கோபிப்பாகள்” என்று பாட்டி எச்சரித்தாள்.

எல்லோரும் விருந்து உண்டார்கள். மாலினியின் தங்கை, தம்பியுடன் மாப்பிள்ளை, சீனவெடி வெடித்தார், மத்தாப்பு ஏற்றி மகிழ்ந்தார்.

இரவு படுக்கும் வரை சுகுணா வரவில்லை. மாலினி மீண்டும் பாட்டியிடம் போனாள்.

"சுகுணா வரட்டும், சொல்கிறேன். கடைசியில் இப்படிச் செய்து விட்டாளே!" என்று மாலினி பொருமினாள்.

"என்னடி, தத்துப்பித்தென்று உளறிக் கொண்டு! அவள் எதற்கு இப்பொழுது, நாம் தாராளமாக எதையும் செய்ய முடியாமல்?" என்றாள் பாட்டி.

மாலினியின் மனம் மிகவும் வேதனை கொண்டது. அவள் சரசரவென்று அங்கிருந்து நகர்ந்து தன் கண வனைத் தேடிச் சென்றாள். அங்கே அவனுடன் அவள் தாயார் பேசிக்கொண்டிருக்கவும், அவள் சங்கோசத்துடன் வெளித் தாழ்வாரத்தில் நின்று விட்டாள். உள்ளேயிருந்து பேச்சுக் குரல் கணீரென்று கேட்டது.

"அவள் பிள்ளைதான் இது. அவள் கணவன்தான் ஆபீஸ் சொத்திலே கையை வைத்துவிட்டு, ஜெயிலே கிடக்கிறான். பின்னே, ஊரான் சொத்து நெருப்பு இல்லையோ? நேர்மை வேண்டாமோ? ஆனால் அவள் ஒன்றும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. ஜோராக வேளைக்கு ஒரு உடை, வாடாத புன்சிரிப்பு, பூ வென்ன, கொண்டையென்ன?" என்று மாலினியின் மாமியார் தன் மகனிடம் கூறிக் கொண்டிருந்தாள்.

மாலினியின் கண்களிலே நீர் சுரந்தது. அவள் அதை விரல் நுனியால் சுண்டிவிட்டுக் கொண்டாள். இதற்குள் கீழே முரளி எழுந்து 'ஓ' வென்று அழும் குரல் கேட்டது. மாலினி குழந்தையிடம் ஓடினாள். 'வயிற்றை வலிக்கிறது' என்று கை காலில் நிற்காமல் பலமாக அழுதது குழந்தை. கூடவே, "அம்மா! அம்மா எங்கே?" என்று கேட்டது.

சுகுணாவை அழைத்து வர அவள் அண்ணன் கிளம்பினார். ஆனால் பத்து நிமிஷத்துக்குள் திரும்பி விட்டார், சுகுணா இல்லாமல்தான்.

மாலினி தனிமையில் தன் தகப்பனாரைத் தேடிச் சென்று கேட்டாள்.

"சுகுணா பள்ளிக்கூடத்தில் ஒன்றுமே விசேஷம் இல்லையாம். நம்மிடம் அவள் பொய் சொல்லிவிட்டு எங்கே போனாளோ தெரியவில்லையே?" என்றார்.

"அப்பா! அவளுக்கு உயிர்த் தோழி நளினி என்பவள். அவள் வீட்டில் இருப்பாளோ என்னமோ?" என்றாள் மாலினி.

"இப்பொழுது ஒன்றும் நீங்கள் மறுபடியும் இருட்டிலே போய், கண்ட கண்ட வீட்டிலும் கதவை இடித்துக் கொண்டு நிற்க வேண்டாம். அவளுக்கு உலகமே இலட்சியமாகத் தோன்றவில்லை. பின்னே எப்படி யிருக்கும்?" என்றாள் மாலினியின் தாயார்.

"அம்மா! அவர்களிடமெல்லாம் ஒன்றும் சொல்லாதே. சுகுணா காலையில் நிச்சயம் வந்து விடுவாள்..." என்று கெஞ்சினாள் மாலினி.

குழந்தை முரளியை ஒருவாறாகச் சமாதானப்படுத்தி விட்டு எல்லோரும் படுக்கப் போயினர்.

பின் காலை நான்கு மணிக்குள் எல்லோரும் மங்கள ஸ்நானம் முடிந்து புதிய உடை உடுத்திக் கொண்டு பட்சணங்களைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது சுகுணா உள்ளே வந்தாள். அவள் நடையிலே ஒரு துடிப்பு, முகத்திலே ஓர் ஆனந்தம். அவள் சந்தோஷமாக உள்ளே வரவும், அவள் தகப்பனார் எழுந்து, "நில், நேற்று எங்கே போனாய்? உண்மையைச் சொல்" என்றார்.

சுகுணா எல்லோரையும் ஒரு முறை பார்த்தாள். நிதானமாகத் தலை நிமிர்ந்து தந்தையைப் பார்த்துப் பேசினாள். "முதலில் தோழி வீட்டுக்கு, பிறகு ஜெயிலுக்கு" என்றாள்.

யாரும் அவளை மேலே கேள்வி கேட்கவில்லை. ஆனால் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். சுகுணாவின் கண்களை நீர் மறைத்தது, தொண்டை கண்ணீருடன் கனத்தது. "என் தோழி நளினியின் தகப்பனார் ஜெயிலில் மேற்பார்வையாளராக இருக்கிறார். முரளியின் அப்பாவுக்குக் கொஞ்சம் பட்சணம் கொடுத்து விட்டு, கண்ணால் பார்த்து விட்டு வரலாம் என்று போனேன்."

"அவன் செய்த காரியத்துக்குப் பட்சணம் வேறா?" என்று கேட்டார் சுகுணாவின் தமையன்.

"எனக்கு அப்படித் தோன்றவில்லை. மேலும் இங்கேயிருந்தால் என்னைப் பார்த்துப் பார்த்து நீங்களும் சகஜமாக, தாராளமாக, பண்டிகை கொண்டாட முடியாதே என்றுதான் முதலில் தலை மறைத்துக் கொள்ள எண்ணி அம்மாவிடம் பொய்ச் சாக்கு சொல்லிவிட்டு நளினியின் வீட்டுக்குப் போனேன். அங்கே போன பிறகு தான் அவரைப் பார்க்க அனுமதி கிடைக்கும் என்று அறிந்து கொண்டேன். அவர்களே பட்சணங்கள் கட்டிக் கொடுத்தனர். நான் அவரைப் பார்த்தேன். நமக்கெல்லாம் ஒரு நற்செய்தி கொண்டு வந்திருக்கிறேன்" என்றாள் சுகுணா. அவள் தொண்டை உடைந்து போய் விட்டது.

"என்ன?" என்று கேட்டார் தந்தை. அவர் கண்களிலும் நீர் தளும்பியது.

"முரளியின் அப்பா நிரபராதி என்று ருசுவாகும்படி ஏதோ சாட்சியங்கள் கிடைத்திருக்கின்றனவாம். அதனால் இவரை இன்றைக்கே விடுவித்து விடுவார்களாம்" என்று கூறும் போதுதான் அவள் கண்களில் கண்ணீர் நிரம்பி வழிந்தது.

"என்ன? யார் சொன்னார்கள்?"

"நளினியின் அப்பாதான் சொன்னார். யாரோ கூட வேலை செய்கிற பேர்வழி செய்த வேலை இது. முரளியின் தகப்பனாருக்கு மிகவும் சிநேகமாம். அவன் ஒரு மாதத்துக்கு முன்பே திருடிக் கொண்டு, ராஜினாமா கொடுத்து விட்டு ஓடிவிட்டானாம். நம் துரதிருஷ்டம் காரணமாக முதலாளி இவரிடம் இரும்புப் பெட்டிச் சாவி கொடுத்த அன்றைக்குத்தான் களவு கண்டு பிடிக்கப் பட்டது. போதாக் குறைக்கு இவரும் அதை ஒப்புக் கொண்டு விட்டார்..."

எல்லோருடைய ஆவலும் தூண்டப் பெற்று விட்டது. ஒவ்வொருவரும் அவளிடம் பல கேள்விகள் கேட்டனர்.

"அந்த மனிதரின் மனைவி க்ஷயரோகத்தில் தவிக்கிறாளாம். வைத்தியம் செய்யப் பணமில்லை. நெருக்கடியில் செய்து விட்டார் தப்பை. தலை மறை வாகவும் வாழ்ந்து வந்தார். பிறகுதான் தமக்காகத் தன் நண்பன் பொய் வாக்கு மூலம் கொடுத்துவிட்டுச் சிறையில் இருப்பது தெரிந்ததாம். உடனே சர்க்காருக்கு, ஜெயிலுக்கு, ஆபீஸுக்கு எல்லா இடங்களுக்கும் எழுதிப் போட்டு விட்டு ஜாமீனையும் செலுத்தி விட்டாராம். ஒரு வாரமாக நடக்கிறது இந்த நடவடிக்கை. தீர்மானமாகத் தெரிந்த பிறகு சொல்லலாம் என்று இருந்தாராம் நளினியின் அப்பா." சுகுணாவால் பேசவே முடியவில்லை. அவள் பேசாமல் எழுந்து உள்ளே சென்றாள். அவள் மதனி அவளுக்குச் சூடாகக் காப்பி கொண்டு வந்து கொடுத்தாள். அதைக் குடித்து விட்டு அவள் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு நடமாட ஆரம்பித்தாள். பின்புறம் போனபோது விசும்பல் கேட்டு அவள் திடுக்கிட்டு நோக்கினாள். மாலினி ஒரு சுவரில் சாய்ந்தபடி விக்கி விக்கி அழுது கொண்டிருந் தாள்.

"என்னடி அசடு!" என்றாள் சுகுணா.

"சுகுணா! சுகுணா! உனக்கு ஏன் அந்தப் பெயரை வைத்தார்களோ! அதனால் தானே நீ இப்படி யெல்லாம் கஷ்டம் அனுபவிக்கும்படி கடவுள் வைக்கிறார்?" என்று குழறினாள் மாலினி.

"எனக்கு எப்பொழுதும் கஷ்டமே இல்லை, மாலினி! இப்பொழுது அதன் சாயையும் அழிந்தது. இனி அழுவானேன்" என்றாள் சுகுணா நிதானமாக.

"உங்களைப் போல எல்லோரும் இருப்பார்களா?" என்று குரல் கேட்டுத் திரும்பினாள் சுகுணா. மாலினியின் கணவன் நின்று கொண்டிருந்தான்.

"நான் ஒன்றும் அப்படிப்பட்ட தெய்வம் இல்லை..."

"தெய்வமோ, மனுஷியோ? தகாத காரியத்தைக் கணவன் செய்து விட்டான். உற்றார் யாவரும் அவமானத்தில் குன்றிக் கிடக்கிறார்கள். உலகம் சுட்டிக்காட்டி நகைத்தாலும் ஒன்றையும் பொருட்படுத்தாமல் சிரித்து இன்பமாகப் பேசி, அந்தக் கணவனிடம் அன்பு குறையாமல் இருப்பது என்பது..."

"அன்பு இருந்தால் எதுதான் சாத்தியமில்லை? எனக்கு அவர் அன்புதான் தெரிகிறது. அவருக்குத் தண்டனை அளிக்கக் கடவுள், மனச்சாட்சி, நீதிமன்றம்-இத்தனை இருந்தன. அன்பு செலுத்த நான் ஒருத்திதான் இருந்தேன். அவர் நேர்மையற்றவராக இருந்திருந்தால், அவருக்கு இருந்த வசதிக்கு எப்பொழுதோ நிரபராதி என்று நிரூபிக்கப்பட்டு இன்று உங்களுடன் மாப்பிள்ளை மரியாதை பெற்றிருப்பார். அவருடைய நட்பு அவமானத்தைப் பெரிதாகக் கருதவில்லை" என்றாள் சுகுணா ஆவேசம் வந்தவள் போல.

"உங்கள் திடமான நம்பிக்கைதான் உங்கள் கணவரை மீட்டது. இது உறுதி" என்றான் மாலினியின் கணவன். சுகுணா இலேசாக முறுவலித்தாள்.

அன்று மாலை தாமே காரில் சென்று மூர்த்தியை அழைத்து வந்தார் மாலினியின் தந்தை. சுகுணா குழந்தை முரளியுடன் வாசற்படியிலேயே நின்றாள். கணவன் படியேறி வந்ததுமே குழந்தையை அவனிடம் நீட்டினாள். முரளியும் தன் தகப்பனைப் பார்த்து விட்டு, "போ, அப்பா! என்னை விட்டு விட்டு எங்கே போனாய்?" என்று கேட்டான்.

"இங்கேயே கிட்டேயேதானடா- ஒரு அன்புப் பிணைப்பிலே" என்று கூறிவிட்டுப் பெருமிதத்துடன் தன் மனைவியைப் பார்த்தான் மூர்த்தி.

அவரவர்களும் தங்கள் மன உருக்கத்தைக் காட்டிக் கொள்ளச் சங்கோசப்பட்டு எங்கெங்கோ பார்ர்த்தனர்.

"நில்லுங்கள், ஆரத்தி எடுக்கட்டும்" என்று சுகுணாவின் தந்தை சொன்னார்.

சுகுணா கணவன் அருகில் நின்றாள். அவள் தாய் மஞ்சள் நீர் சுற்றி, திருஷ்டி கழித்து விட்டுச் சென்றாள்.

"தலை தீபாவளி மாலினிக்கா? அல்லது உனக்கா?" என வேடிக்கையாகக் கேட்டான் மூர்த்தி தன் மனைவி யிடம்.

"எல்லோருக்குமே தான். ஊரில் தீபாவளி முடிந்து விட்டது. நமக்கு இனிதான் ஆரம்பம்" என்றார் சுகுணா வின் அண்ணன்.

எல்லோரும் கூடத்தில் போய் அமர்ந்ததும், மாலினியும் அவள் கணவனும் சுகுணாவுக்கும் மூர்த்திக் கும் நமஸ்காரம் செய்தனர். அப்பொழுது மூர்த்தி, "சுகுணா பெயரிட்ட தோஷத்துக்காக வேஷம் போடு கிறாள். மாலினி அசல் சுகுணம்" என்றான்.

"நான் கூட உன்னைத் தவறாக எண்ணி விட்டேனே அம்மா!" என்றாள் மாலினியின் மாமியார் சுகுணாவைப் பார்த்து.

"அதனால் என்ன மாமி?" என்று தள்ளி விட்டாள் சுகுணா.

"இந்த உள்ள நிறைவு என்றும் எங்களுக்கும் இருக்க வேண்டும் என்று ஆசீர்வதியுங்கள்" என்று வேண்டிக் கொண்டான் மாலினியின் கணவன்.

"மாலினி அன்பே உருவெடுத்தவள்" என்று மிகுந்த வாத்சல்யத்துடன் பதிலளித்தாள் சுகுணா.

"சுகுணா!" என்றாள் மாலினி. தொண்டை அடைத்தது. கேவிக் கேவி அழ ஆரம்பித்து விட்டாள் அவள்.

"சீ, சீ அசடு. அது கிடக்கட்டும். 'அத்தை' என்று கூப்பிடு!" என்றாள்.

எல்லோரும் துளியேனும் சங்கோசமில்லாமல் ஆனந்தக் கண்ணீரை வழிய விட்டனர் அப்போது.

அதுவே புனிதமான கங்கா ஸ்நானம் போலிருந்தது.

(கல்கி–தீபாவளி மலர், 1957)

------------